# தமிழ்மொழியும் சைவசமயமும்

தமிழெனினும் சிவமெனினுமொக்கும்; தமிழ் இனிமையுமாம், செந்தமிழ் ஈண்டுச் செம்மைாடு, செங்கதிர், செஞ்ஞாயிறு என்பவற்றுட்போல செந்தமிழ்நாடு, கொடுந்தமிழ் நாடுகளுக்கு நடுவிலுள்ள தமிழ்நாடென்பது பொருள்.

"செந்தமிழ் நிலமாவது வைகையாற்றின் வடக்கும் மருதயாற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்."

கொடுந்தமிழ்நாடு, செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த தமிழ் நாடென்று பொருள். கொடுமை - வளைவு; அதாவது, சூழ்தல், செந்தமிழ் நிலம் நடுவிலும், அதனைச்சூழப் பன்னிரண்டு கொடுந்தமிழ் நிலமும், அக்கொடுந்தமிழ் நிலத்தைச் சூழச் சிங்களம் சோனகமுதலிய நாடுகளும் வைத்துக்கூறினதை யுணரிற் சூரியன் கோளரசு என்பது போலத் தமிழ்மொழியா மென்பது பெறப்படுகின்றது. மொழி - பாழை. கோளரசு - கிரகபதி. ஏனைய கோள்களுக்கு நடுவிலிருத்தலின், அரசெனப்பட்டது, வலம்புரியும் சலஞ்சலமும் பாஞ்சசன்னியமும் நடுவிலிருத்தலின் தகம்மை யாயின.

இங்ஙனமாயதகம்மை இயற்கை அமைதியாம். கல்லூரி முதலியவற்றில் தகம்மையாயினார் நடுவில் வீற்றிருந்தே கண்காணஞ் செய்வர்.

### கண்காணம் - மேல்விசாரணை.

கோள்களுக்கு நடுவிலுள்ளது சூரியன்; நவந்தருபேதத்துள் நடுவிலுள்ளது சதாசிவம்; சூரியன் நடுவிலுள்ளதும் சதாசிவமே.

உலகமூன்றில் நடுவிலுள்ளது இவ்வுலகம்; இவ்வுலகில் நடுவிலுள்ளது குமரிநாடு; குமரிநாட்டி னடுவிலுள்ளது குன்றநாடு; குன்றநாட்டி னடுவிலுள்ளது மணிமலை; இம்மலை சூரியன் மைய வரியுமாம்.

வேதமூன்றுள் நடுவிலுள்ளது எசுர்வேதம்; இவ்வேதமே நண்பகலில் ஓதற்பாலது; நண்பகல் - உச்சிப்பொழுது, எசுர்வே கனகாதத்தினடுவிலுள்ளது சதருத்திரீய மந்திரம்; இதனடுவிலுள்ளது பஞ்சாட்சர மந்திரம்; இதனடுவிலுள்ளது சிவம்.

இனிச் சூரியனுக்கும் குன்றகாட்டிற்கும் எசுர்வேதத்திற்கும் இயைபுண்மையிற் சூரியனாலுண்டாகி மணிமலையில் வளர்ச்சி பெற்ற தமிழ்மொழிக்கும் சைவசமயத்துக்கும் பெரிதும் இயைபுண்மை கண் கூடாகின்றது.

“அசலேசுரர் புத்திரனே குணதிக்
கருணோதய முத்தமிழோனே" - (திருப்புகழ் அச்சு)

"செந்தமிழாகரனே சிவசிவசூரியனே" (சூரியதோத்திரம்)
என்பவற்றால் தமிழ் சூரியனாலுண்டாகிய தென்பது தெள்ளிதாகின்றது.

சமவாயம் என்பது சமயமாயிற்று. சமவாயம் - ஒற்றுமை, இலங்கையைப் பூமியின் மத்தியாக வைத்துக் கணனவிதி எழுதத் தொடங்கிய நமது நாட்டுக் கோள சாஸ் திரிகள் " இலங்கை மத்தியிலும் யவகோடி கீழ்ப்புறத்திலும் உரோமகம் மேற்புறத்திலும் அடியில் சித்தபுரியும் இக்கோணத்திலமைந்திருக்கின்றன" என்று வெளியிட்டனர். யவகோடி சாவகம்.

சித்தபுரி - அமரிக்கா.

முற்கூறிய குமரிநாடே இலங்கையாகும்.

அது கடல் கோட்பட்டது.

இதனால் குமரிநாடு பூமியின் மத்தியென்பது துணிபு.

"பேராற்றருகில் பிறங்குமணிமலையில்
சீராற்றுஞ்செங்கோற் றிறற்செங்கோ - நேராற்றும்
பேரவையிலே நூற் பெருமக்கள் சூழ்ந்தேத்தப்
பாராசுசெய்த தமிழ்ப் பைந்தேவி"

என்னும் தமிழ்விடு தூதினால் தமிழ் மணிமலையில் வளர்ச்சி பெற்றமை தெள்ளிதாகின்றது.

பாழை - பாழி பாழையாயிற்று; சித்தர்கள் பரிபாழை யென்பர், பாழி - முனிவர்வாசம்.

முனிவர் குழாத்தினின்று முண்டாயதென்பது பொருள் முனிவர் வாசமாவது. மணிமலையிலுள்ள குகை. பாழி - குகை, முனிவர் வாசம், தேவர் கோயில்,

"பித்தர்கோயிலரதைப் பெரும்பாழியே" (ச - தே)
பாழி - பாழை; இகரம் ஐகாரமாயிற்று.

## முசலி முதலையாயினது போல.

மற்றெல்லாப் பாழைகளிலும் தமிழின் வியாபசமும், மற்றெல்லாச் சமயங்களிலும் சைவசமயத்தின் வியாபகமும் உண்மையின் ஒரு பாழையையும் இகழற்க; ஒரு சமயத்தையும் இகழற்க, மற்றும் மொழி நூலென்னும் பாஷாசாஸ்திரத்தால் நன்கு விளக்கமாகும்.

ஸ்ரீமான் மறைத்திருவன் சுவாமி விருதை சிவஞானயோகிகள் எழுதிய தமிழ்மொழியும் சிவநெறியும் என்னும் உரைச்செய்யுள் சாலவும் மதிக்கற்பாலது; யாவரும் கற்க.

இங்ஙனம்
மாகறல் - கார்த்திகேய முதலியார்,
கண்டி, சைதாப்பேட்டை.

சித்தாந்தம் - 1913 ஹூ - செப்டம்பர் மீ